வளமுடன் வாழ! ஒன்றாக நல்லது சொல்லாமை வரமருள் வேலா!!

கௌமார

# அமுதம்

விலை ரூ. 10.00

ஒளி : 22
கதிர் : 02



கௌமார மடாலய நிகழ்ச்சிகளை நேரலையில் காண

சுபகிருது ஆண்டு சித்திரை மாதம் (ஏப்ரல்-2023)

பொன்னே! மணியே! அருள் வாரி வாரிப் பொழி புயல்நேர்
மின்னே! பரமன் உளம் உருக்கும்சொல் வியன்கிளியே!
மன்னே! மரகத மே! ஒப்பு இலாஅருள் மாணிக்கமே!
அன்னே! அபயம்; அவிநாசி வாழ் கருணாம்பிகையே.

– தவத்திரு. கந்தசாமி சுவாமிகள்

சிறப்பாசிரியர்
திருப்பெருந்திரு. இராமானந்த குமரகுருபர சுவாமிகள்




சிரவை ஆதீனத் திருத்தொண்டர்
முனைவர். கி.குமாரசாமி அவர்களின் பவளவிழா




யுனிவர்சல் விளையாட்டுப் பள்ளி சார்பில் மாநில அளவிலான யோகா போட்டி
குருமகா சந்நிதானங்கள் தலைமையில் நடைபெற்றது






குருமகா சந்நிதானங்களுடன் இலக்கியப் போட்டிகளில் வெற்றிபெற்ற
தவத்திரு. கந்தசாமி சுவாமிகள் மெட்ரிக் பள்ளிக் குழந்தைகள்



ஒன்றாக நல்லது கொல்லாமை

# கௌமார அமுதம்

திருவள்ளுவராண்டு 2053
சுபகிருது சித்திரை
ஒளி : 22 கதிர் : 02
2023



**அச்சிட்டோர் :**
ருக்மணி ஆப்செட் பிரஸ்
E-32, சிட்கோ இண்டஸ்ட்ரியல் எஸ்டேட்,
கோயம்புத்தூர் - 641 021.
போன் : 0422 2672789

## பொருளடக்கம்



**சந்தா விபரம்**

| | |
|---|---|
| தனி இதழ் | ரூ.10.00 |
| ஆண்டுச்சந்தா | ரூ.100.00 |
| ஆயுள் சந்தா | ரூ.1000.00 |

**கௌமார அமுதம்**
ஆசிரியர், கௌமார மடாலயம்,
சின்னவேடம்பட்டி (அஞ்சல்)
கோவை - 641 049. போன் : 2666370
இணையதளம்: *www.kaumaramutt.org*
மின் அஞ்சல்: *kaumaramutt@gmail.com*

**உங்கள் சிந்தனைக்கு......**

**அரிதில் அரிதே அறிவினார் கூடிப்**
**பிரிவிலாப் பேறு பெறல். - சாத்திரப்பகுதி**

கிடைத்ததற்கரிய சிறப்பு யாதெனில் அறிவிற் சிறந்த சான்றோரை பிரியாது இருத்தலே ஆகும்

# மறைமொழி

தவத்திரு. இராமானந்த குமரகுருபர சுவாமிகள்
சிறப்பாசிரியர்

✡ சென்ற இதழின் தொடர்ச்சி: ✡

கடலின் அலை போல் ஓயாது ஒற்றை நிலைப்பாட்டுடன் இல்லாதது மனமாகும். அத்தகைய மனதினை ஒடுக்கி ஒருநிலைப்படுத்துதல் என்பது சாத்தியமற்றது. எனவே தான் தவத்திரு கந்தசாமி சுவாமிகள் இவ்வாறு எடுத்துரைக்கின்றார்.

இதனையே ஆதிகுரு முதல்வர் தவத்திரு இராமானந்த சுவாமிகள்

**"பொற்பாதம் என்மனதில் பூட்டி இருள் ஓட்டி**
**நற்போதமே அருளி நலியாமல் காத்தருளே"**

என்று மெஞ்ஞான காதல் என்னும் பகுதியில் எடுத்துரைத்துள்ளார். ஐம்புலன்களை (மெய், வாய், கண், மூக்கு, செவி) ஆளத்தெரிந்திருப்பினும் இவை ஐந்தினையும் ஆட்சி செய்யும் மனதினை தன் வசப்படுத்துதல் அரிதாகும்.

**"ஆளுவதும் போராடும் ஐம்புலனை ஒன்றுஆக்கிச்**
**சூழும் போக்கித் தொடக்கு அறுப்பது எக்காலம்?**

என்றும் சுவாமிகள் எடுத்துரைக்கிறார்.
இதனையே ஔவையார் தமது விநாயகர் அகவலில்

**"ஐம்புல தன்னை அடக்கும் உபாயம்**
**இன்புறு கருணையின் இனிது எனக்கு அருளி ..."**

என்று பாடியுள்ளார். இறைவனை எந்நேரமும் எண்ணி மனதில் வைத்து வழிபடுவோருக்கும் தன் மனதினை முழுமையாக இறைவன் பால் செலுத்த இயலாது தவித்துள்ளமையை இதன் மூலம் அறிய முடிகிறது.

மனதினை ஒருமுகப்படுத்தி ஐம்புலனையும் ஆளும், மனதினை தவவலிமையால் இறைவன்பால் செலுத்துவோர் மெஞ்ஞான ஒழுக்க நெறியில் நெடுங்காலம் வாழ்வார். இதனையே வள்ளுவர்

**"பொறிவாயில் ஐந்தவித்தான் பொய்தீர் ஒழுக்கம்**
**நெடுநின்றார் நீடுவாழ் வார்"** என்கிறார்.

இக்கருத்தினை ஒத்தே தவத்திரு இராமானந்த சுவாமிகள் சிந்தையை ஒடுக்கி யோகினைப் புரிய திருவருள் துணை என்று வருமோ! என்று உருகுகின்றார் இதனையே சுந்தரமூர்த்திநாயனார்

**"மண்ணிடை அடியார்கள் மனத்து இடர் வாராமே**
**விண்ணிடை குறுகாவூர் வெள்ளடை நீ அன்றே.**

மண்ணில் வாழும் அடியார்கள் மனதில் இடர் வாராமல் காக்க வேண்டும் என்று இப்பாவில் உரைப்பதன் வாயிலாக ஆள்மனதைக் காக்கும் ஆற்றல் இறைவன் பால் நம் மனதை செலுத்தினால் மட்டுமே முடியும் என்பதை அறிய முடிகிறது.

**"சலனம் உரும் என் மனதால் தட்டழிந்து வாடுகின்றேன்**
**நலம் அருளிக் காப்பாய் நாதா! அடைக்கலமே."**

என்று தவத்திரு இராமானந்த சுவாமிகள் பாடுவதன் வாயிலாக, தவத்திரு கந்தசாமி சுவாமிகளின் கூற்று மெய் ஆகிறது.

மேலும் சுவாமிகள் மனமே ஒருவனது கண்ணாடியாகிறது. மற்றவர்கள் முன் அவனது நிலைப்பாட்டை உணர்த்துவது மனமே ஆகும். இதனை

**இல்லாத கற்பனைகள் எடுத்துக்காட்டும்**
**என் மனதின் செயற்கையினால் இகத்துள் ஆர்க்கும்**
**பொல்லாத பாவி எனப் பேர்தான் கொண்டேன்**
**போதும் இதுவரையில் இந்தப் புவியின் வாழ்க்கை**

என கந்தவேல் பதிகவந்தாதியில் பாடுகின்றார்.

மனிதனது தூய்மை இரண்டு வகையனவாம் அவை உடற்தூய்மை, மனத்தூய்மை முதலாவது அனைவராலும் கொள்ளத்தக்கது. ஆனால் மனத்தூய்மை என்பது எளிதென்று இதனையே பொய்யாப் புலவர்

**"மனத்துக்கண் மாசில னாதல் அனைத்தறன்**
**ஆகுல நீர பிற" என்கிறார்.**

மனதால் குற்றமில்லாதவராக ஆதலே அறம். மற்றவை எல்லாம் அறம் ஆகா என்கிறார்.

குறிக்கோள் மிக்க வாழ்க்கையை உணர்த்தி மனதின் குற்றத்தை போக்கும் வலிமை நூல்களுக்கு உண்டு இதனை பவணந்தியார் **"மனக்கோட்டம் தீர்க்கும் நூல் மாண்பு"** என்கிறார்.

"ஆறறிவதுவே அவற்றோடு மனமே" (தொல் 1526) மேலும் "மக்கள் தாமே ஆறறி வினவே, பிறவும் உளவே அக்கிளைப் பிறப்பே" (தொல் 1532) என்று தொல்காப்பிய நூற்பா கூறுகிறது.

இறைவனை முழுமையாக உணர்ந்து, அறிவினால் தெளிந்து இறைப்பதம் அடைய வழியாதெனில் அது மனதைச் சீர்படுத்துவதே ஆகும். இதனையே அருணகிரிநாதர்,

வசனமிக வெற்றி மறவாதே; மனது துயராற்றி உழலாதே எனப் பாடுகின்றார்.

மனமென்னும் சொல் மன்னுதல் என்னும் சொல்லின் அடியாகப் பிறந்தது அதாவது ஆன்மாவில் நிலைபெற்று விளங்குவது. மனம் என்பது பார்த்தல், கேட்டல், நுகர்தல், பேசுதல், உணர்தல் என்ற ஐம்புலநுகர்வுகளுடன் சிந்தனை என்ற பகுதியுள் அடங்கிய ஒருவகை நரம்பு செயல்பாடு என்கிறார் கு.வை.இளங்கோவன்.

மனம் ஒருநிலைப்பட்டால் சரியை, கிரியை, யோகம், ஞானம் என்று படிப்படியாக நான்கு நிலைக்குச் சென்று முக்தி அடையலாம் என்கிறார் சட்டைமுனி. இதனையே அகத்தியர் மனமது செம்மையானால் மந்திரம் செபிக்க வேண்டாம் என்றும் உரைக்கிறார். பெண்டிருக்கு மனதை விட சிறந்த காவல் எதுவும் இல்லை. நம்மை நாம் பாதுகாத்துக் கொள்ளக்கூடியது நம் மனதின் பொருட்டே அமைகிறது.இதனையே வள்ளுவர்

**“சிறைகாக்கும் காப்பெவன் செய்யும் மகளிர்**
**நின்றகாக்கும் காப்பே தலை.**

அதாவது பெண்களை சிறையால் காக்கும் காவல் அவர்களது மனமே ஆகும் என்கிறார். அகத்தின் அழகு முகத்தில் தெரியும் என்பது முதுமொழி அகம் என்பது மனமே ஆகும் மனதை எளிமையாக ஒருமுகப்படுத்ததல் இயலுமோ? காற்றினை விட கடும் வேகம் செல்லும் மனதைப் பற்றி தவத்திரு இராமானந்த சுவாமிகள்

**“சஞ்சல மனதை ஒருவழிப் படுத்தச்**
**சாத்தியப்படவில்லை”** என்று பாடியுள்ளார்.

மனதினது தூய்மை எதனைப் பொருத்தமையும்

**“மனந்தூய்மை செய்வினைத் தூய்மை இரண்டும்**
**இனந்தூய்மை தூவா வரும்.**

அதாவது மனத்தூய்மையும், செய்யும் செயலின் தூய்மையும் ஆகிய இரண்டும், சேர்ந்த இனத்தின் தூய்மையைப் பொருத்தே அமையும் என்கிறார் வள்ளுவர் பெருந்தகை. மேலும் மனநலம் மன்னுயிர் காக்கும் என்றும் கூறுகிறார். இவ்வாறாக தவத்திரு கந்தசாமி சுவாமிகள் ஒரு கணப்பொழுதும் தனது மனம் நிலைபெற்று இறையின் பதத்தை எண்ண இயலவில்லை, இருப்பினும் இறைவன் தன்னைத் தன் கருணையால் காக்கின்றான் என வியக்கின்றார். அடுத்து சுவாமிகள் கூறிய கந்தபுராணச்சாரத்தைக் காண்போம்

தொடரும்...

**தவத்திரு.கந்தசாமி பனுவல்திரட்டு**

# தென்கயிலாயச் சத்திநாயக மாலை மூலமும் உரையும்

**- சொல்லரசு. வீ. சிவஞானம், கோவை**

சென்ற இதழின் தொடர்ச்சி:

**36. காந்தம் வல்இரும்பை ஈர்த்தலில்க் கருத்தைக்
கவர்வது நின் கழல் ஆக்கி,
வாய்ந்த யாக்கையினில் ஒன்றல்போல் நின்மெய்
வடிவினில் புணர்ந்து உறப் புரியாய்
சாந்தம் நாறிடுகூவிளத் தரு கவிகள்
சமர் கடத்து அரும் துணை என விண்
வேந்தன் உள் உவப்பு உற்று ஏத்தும் தென்கயிலை
வித்தகா! சத்திநாயகனே!**

**அருஞ்சொற்பொருள்**: ஈர்த்தலில் - கவர்வதைப்போல. வாய்ந்த வாய்த்துள்ள. யாக்கையினில் - உடலில் ஒன்றல் போல் ஒன்றாவது போல. புணர்ந்துற - இரண்டறக் கலக்க. கூவிளத்தரு - வில்வ மரம். கவி - பாடல், சமர் - பார் கடம் - யானைக் கூட்டம் விண்வேந்தன் இந்திரன்.

**பொழிப்புரை**: சந்தனம் மணம் வீசுவதும், வில்வ மரங்கள் நிறைந்ததும், புகழ்ந்து பாடும் பாடல்களை ஏற்றுக் கொள்வதும், போரிடும் மதயானைகள் திரிவதும், இந்திரன் தனக்கு அரிய துணையாக விளங்குவது என்று உள்ளம் மகிழ்ந்து போற்றுவதும், ஆகிய தென்கயிலை மலையாய் விளங்கும் வித்தகனே! சத்தியின் நாயகனே!

காந்தம் வலிய இரும்பைக் கவர்வது போல எனது கருத்தைக் கவர்வது நினது திருவடியே என்பதாகச் செய்து, கிடைத்த இவ்வுடம்பில் உயிர் இரண்டறக் கலந்து இருப்பது போல நினது மெய்யான வடிவத்தில் என்னை இரண்டறக் கலந்து இருக்குமாறு செய்வாயாக.!

**37. சுழிபடு நீர் போல் மெய் அறிவு அனைத்தும்
சூறை கொண்டிடு படு மாயைக்
குழி விழுந்து அயர்வேன் என்னை மெய் அன்பர்
கொண்ட பேர் இன்பு உறத்திருத்தாய்
செழிய ஆகாயம் தன் பெரு வடிவில்த்
திகழும் எண் அற்ற தாரகை ஆம்**

**விழி கொடு நோக்க விளங்கு தென்கயிலை**
**வித்தகா! சத்திநாயகனே!**

**அருஞ்சொற்பொருள்**: சுழ்படு - சுழல்கின்ற. சூறை - கொள்ளை. படு - அகப்படுத்திக் கொள்கின்ற. அயர்வேன் - சோர்வு அடைவேன். திருத்தாய் - தவறுகளைத் திருத்தி செம்மைப் படுத்துவாய். செழிய - செழிப்பான. தாரகை - விண்மீன் (நட்சத்திரம்).

**பொழிப்புரை**: செழிப்பு மிகுந்த ஆகாயமானது தனது பெரிய பரப்பில் விளங்கும் எண்ணிலாத விண்மீன்களாகிய கண்கள் கொண்டு நோக்குமாறு விளங்குகின்ற தென்கயிலை வித்தகனே! சத்தியின் நாயகனே!

சுழித்து ஓடும் நீர்போல் மெய்யறிவு முழுவதையும் கொள்ளை கொண்டு தன்னுள் அடக்கிக்கொள்ளும் மாயையாகிய குழியில் விழுந்து சோர்வடையும் என்னைத் திருத்தி, மெய்யடியார்கள் பெற்ற பேரின்பத்தைப் பெறுமாறு அருளுவாயாக!

**38. மகம் கலந்திட்ட சனியில் என் உயிரை**
**வருத்தும் ஆணவ வலி ஒழித்தே**
**சுகம் கலந்திட்ட நின் அருள்ப் புரண**
**சொரூப மோடு ஒன்றுறப் புரியாய்**
**நகம் கலந்திட்ட மாது கந்தரத்தில்**
**நண்ணிய குரல்கொல் என்று உவந்து**
**விகங்க வர்க்கம் செய் ஒலிகொள் தென்கயிலை**
**வித்தகா! சத்திநாயகனே!**

**அருஞ்சொற்பொருள்**: புரண - பூரண (முழுமையான). சொரூபம் - வடிவம். நகம் - மலை. கந்தரம் - கழுத்து (குரல்வளை). விகங்க வர்க்கம் - பறவை இனம்.

**பொழிப்புரை**: பறவை இனங்கள் எழுப்பும் ஒலியை, மலையரசன் மகளாகிய பார்வதியின் குரல்வளையில் எழுந்த ஒலி என எண்ணி மகிழும் தென்கயிலை மலையாய் விளங்கும் வித்தகனே! சத்தியின் நாயகனே!

மக நட்சத்திரத்தில் சஞ்சரிக்கும் சனி போல என் உயிரைத் துன்புறுத்தும் ஆணவ மலத்தின் வலிமையை ஒழித்து, இன்பம் கலந்த திருவடியைத் தந்து, நினது முழுமையான சொரூபத்தில் ஒன்றுமாறு செய்வாயாக!

- தொடரும்....

# சுந்தரர் சொற்றமிழ்
## பெரியநாயக்கன்பாளையம்
## சித்திபுத்தி விநயாகர் பதிகம்

- தவத்திரு கஜபூசைச் சுந்தர சுவாமிகள்

சென்ற இதழின் தொடர்ச்சி:

**607. பாஅ னந்தம் வழுத்தி உயர்தண்ட**
**பாணி யோடிரா மானந்த நாதனும்**
**ஆவ லோடு முதலில் வழிபட**
**ஆன்ற நல்அருள் ஆட்சிநல்கும்பரா !**
**காவ கத்துள இந்திரன் ஆதியோர்**
**கழல்ப ணிந்திடக் கண்டக ணேசனே !**
**கழல்ப ணிந்திடக் கண்டக ணேசனே !**
**சித்திபுத்தி. விநாயகத் தெய்வமே !**

**பொருள்:** பா - செய்யுள்கள். தண்டபாணியோடு - வண்ணச் சரபம் சுவாமிகளும், குருநாதர் ஆதலின் ஒடுக்கொடுத்தார். ஆன்ற - மாண்பு மிக்க, பரா - அனைத்திற்கும் மேலானவரே. காவகம் - கற்பகநாடு. சுவர்க்கம்

**608. கற்ப கத்தரு வோடவி ரும்பஞ்ச**
**தருக்கள் போகப் பொருளை உதவிடும்;**
**நற்ப தம்பணி வோர்கட்குப் போகமும்**
**ஞான வீடும்நல் கத்தகும் பீடுசால்**
**பொற்ப விர்ந்திடும் ஐந்துக ரம்கொளும்**
**புண்ணியப் பொரு ளாம்கண நாதனே !**
**சிற்ப ரா !நல்ப் பெரியநாய்க் கப்பதிச்**
**சித்தி புத்திவி நாயகத் தெய்வமே !**

**பொருள்:** பஞ்ச தருக்கள் - கற்பகம் முதலிய ஐந்து தெய்வீக மரங்கள், அவை ஐம்புல நுகர்வுக்குரிய போகப் பொருட்களை மட்டுமே தரும்; முக்தியைத் தர அவற்றால் இயலாது. கணேசனின் ஐந்து திருக்கரங்களோ போகத்தோடு வீட்டுப் பேற்றையும் தரவல்லன. பீடுசால் - பெருமை மிகுந்த. பொற்பு அவிர்ந்திடும் அழகு பொலிந்திடும். சிற்பரா - அறிவுக்கு அப்பாற்பட்டவரே

**609. பல்வ கைப்படு மாறுசெ யல்ச்செயும்**
**பத்தர் யாரும் முதல்உனைப் பூசிக்க**
**நல்வ ரம்தந் தருள்புரி விக்கின**
**நாத னே!அருள்ப் போதம் உணர்த்துவாய்!**
**கல்வ ரைக்குக னைத்துணை யாஉறும்**
**கண்ணி யாவெண் நிலாஅணி யும்பரன்**
**செல்வ னே! நல்ப் பெரியநாய்க் கப்பதிச்**
**சித்தி புத்திவி நாயகத் தெய்வமே !**

**பொருள்:** செயற்செயும் - காரியங்களை இயற்றுகின்ற. விக்கின நாதனே - தடைகளைப் போக்கும் தலைவனே ! அருட்போதம் - இறைவன் திருவருளால் மட்டுமே பெற முடிகின்ற சிவஞானம், நற்குஞ் சரக்கன்று நண்ணில் கலைஞானம் கற்கும் சரக்கன்று காண்' என்பார் உமாபதி சிவச்சாரியார் (திருவருட்பயன் காப்பு) கல்வரைக் குகனை - கற்களாலாகிய மலைகளுக்குத் தலைவன் ஆகிய முருகப்பெருமானை - துணையா - தம்பியாக. கண்ணியா - பெருமிதம் உடையவரே. பரன் செல்வனே - சிவ குமாரரே

**610. கால வாதனை தீர்ந்து,மெய் வீட்டினைக்**
**கருது வாருக் கருள்செயும் கர்த்தனே !**
**மூல காரணன் ஆன முதல்வனே !**
**முன்ன வா ! மொழி யும்துதி ஏற்றருள்**
**நீலமேனிய னேமதம் மூன்றுளாய் !**
**நெற்றிக் கண்உறும் நின்மல மூர்த்தியே !**
**சீல னே ! நல்ப்பெரிய நாய்க் கப்பதிச்**
**சித்தி புத்தி விநாயகத் தெய்வமே !**

**பொருள்:** கால வாதனை இயமனால் உண்டாகும் துன்பம், மரணம், கர்த்தனே - தலைவரே. முன்னவா எங்கும் எதிலும் முதலில் வழிபடப் படுபவரே. நீல மேனியனே விநாயகர் வடிவங்களில் உச்சிஷ்ட கணபதி, ஏக தந்த கணபதி ஆகிய இரண்டும் கரிய (நீலம்) நிறத்தன ஆகும். ஔவையாரும் தன் விநாயகர் அகவலில், நெஞ்சிற் குடிகொண்ட நீல மேனியும் (அடி 8) எனக் கூறியுள்ளார். நின்மல - குற்றமற்ற. சீலனே - அடியார்களின் தீமைகளைப் போக்கி ஆட்கொள்வதையே தலைமைப் பண்பாக உடையவரே.

# சைவப் பெருங்கருணை சேக்கிழார்

திருமதி மகேஸ்வரி சற்குரு

சென்ற இதழின் தொடர்ச்சி:

குடுமித் தேவரின் திருமேனி மீது பூ இட்டது யார்? என திண்ணன் கேட்க, நாணன் “அதுவா அன்றொரு நாள் அந்தணர் ஒருவர் இப்பணி செய்வது பார்த்தேன் அவர்தான் இன்றும் செய்திருப்பார் என்று சொன்னான். பிரியமான தன் குழந்தைக்குப் பசிக்கிறது என்றால் தானே பக்குவமாக இருந்து பரிமாறுவாள் அன்னை. அவ்வாறே திண்ணன் திருக்காளத்தியப்பர் தனியாக இருப்பதுடன், உண்பதற்கு ஏதும் இல்லாமல் பசியோடு இருக்கிறார், நான் போய் உணவு கொண்டு வருகிறேன் என்றவரே தனது அணைப்பிலிருந்து சிவத்திருமேனியை நெகழ்த்தினார், வேகமாக ஓடி உணவு எடுக்கச் சென்றவர் மீண்டும் வந்து அவரை அணைத்தார். மீண்டும் ஒரு அடி நகர்ந்தவர் உணவு கொண்டு வருகிறேன் என்றவர் திரும்ப வந்து கண் இமைக்காமல் காளத்தினாதரைப் பார்த்து பெருமூச்சுடன் அருகே வந்து கண்களில் நீர் பொங்க அணைத்துக் கொண்டார்.

பின் மீண்டும் கை நெகிழ்ந்து நாதரே உமக்கு இளம்பக்குமான இறைச்சியைச் சுட்டுக் கொண்டு வருகிறேன் என்று ஓட்ட ஓட்டமாக மலையிலிருந்து கீழிறங்கினான். திண்ணனின் வேகத்திற்கு ஈடு கொடுக்க இயலாமல் வேகமாக இறங்கிப் பின்னே ஓடினான் நாணன். எதிரே வந்த காடன் ஏன் இவ்வளவு தாமதம்? என வினவுகிறான். நாணன் திண்ணனின் தெய்வப்பித்தை விளக்குவது சேக்கிழாரின் எழில் மிகுந்த பாடல் அடிகள்.

குடுமி தேவரின் மேனியைப் போய் அணைப்பதும், கொஞ்சுவதும், பெருமூச்சு விடுவதும், பின் ஓடுவதும், பிறகு வந்து அணைப்பதுமாய் போக்கு காட்டினான் திண்ணன் சிறந்த இறைச்சி கொண்டு வர இப்போது ஓடுகிறான். மரப்பொந்தைப் பிடித்த உடும்பு தன்பிடியை விடாதது போல் இவனும் இருக்கிறான் தெய்வப் பித்து தலைக்கேறி விட்டது என்றான். சேக்கிழாரின் இந்த உவமை திண்ணனின் பக்தியை அனைவருக்கும் சொல்லும் வண்ணம் உள்ளது. அப்பாடலைப் பார்ப்போம்.

**அங்கிவன் மலையில் தேவர் தம்மைக்கண் டணைத்துக் கொண்டு**
**வங்கினைப் பற்றிப் போதா வல்லுடும் பென்ன நீங்கான்**
**இங்குமத் தேவர் தின்ன இறைச்சிகொண் டேகப் போந்தான்**
**நங்குலத் தலைமை விட்டான் நலப்பட்டான் தேவர்க் கென்றான்**
(765)

வேடுவக் குலத் தலைமையைத் துறந்து சிவனே கதி என இவன் இருக்கின்றான் என்றான். நாணனும், காடனும் திண்ணனின் பித்தைப் பார்த்து பயந்து தேவராட்டிகளுடன் வந்து இப்பைத்தியத்தைத் தெளிவிப்போம் என்று நாணனுடன் தங்கள் இருப்பிடம் செல்கின்றான். இது எதுவும் அறியாத திண்ணன் முழுமையாகத் தன்னை சிவபெருமானது அணுக்க நண்பனாக, தாயாக, செவிலிப் பெண்ணாக மாற்றிக் கொண்டான். தான் சுவைத்துப் பார்த்து நல்லதாக இருக்கின்ற இறைச்சியை அம்பிலும், கொய்த மலரைத் தன் தலையிலும், குடுமி தேவனுக்கு நீராட்ட தன் வாயில் பொன்முகலி ஆற்று நீரும் எடுத்துக் கொண்டு மலையின் மேல் வேகமாக ஏறினாராம். மிக்க அழகியலும், பக்தியின் பெருக்கத்தையும் காட்டும் பாடல் இனி பார்ப்போம்.

**தனு ஒரு கையில் வெய்ய சரத்துடன் தாங்கிக் கல்லைப்**
**புனித மெல் இறைச்சி நல்ல போனகம் ஒருகை ஏந்தி,**
**'இனிய எம்பிரானார் சாலப் பசிப்பர்' என்று இரங்கி ஏங்கி,**
**நனி விரைந்து இறைவர் வெற்பை நண்ணினார் திண்ணனார்தாம்.**
**(771)**

முக்கண்ணனார் சிவபெருமானுக்குப் பசிக்கும் என வேகமாக ஓடும் திண்ணனாரின் பக்தியை சேக்கிழார் இன்றி வேறு எவரால் சொல்லிவிட இயலும். செருப்புக் காலால் சிவத்திருமேனி இருந்த இடம் சுத்தம் செய்து, தன் வாய் நீரை கங்கை நீர் பொங்கி வருதல் போல் மேலே ஊற்றிச் சுத்தம் செய்வித்து, தன் கொண்டையில் அணிந்த மலரை அவருக்குச் சூட்டி அழகு பார்த்து, தான் சுவைத்துப் பார்த்த இறைச்சியை உண்டு ஊட்டினான். பக்தனின் பக்தியை நேரடி ஒளிபரப்பு செய்த பெருமை சேக்கிழார் பெருமானையே சாரும். திண்ணனின் பேரன்பை மேலும் ஓர் உன்னத அடி கொண்டு விளக்குகிறார்.

காட்டிலே துயில்கின்ற குழந்தையை கொடிய மிருகங்கள் சூழ்ந்து விட்டால் என்ன செய்வது? என்று குடுமித் தேவர் திருமேனி அருகே நின்று காவல் காக்கின்றாராம். தனது அண்ணன் இராமனும் அண்ணியார் சீதையும் உறங்கும் போது வில்லை ஊன்றிய கையோடு உயிர்ப்புடனும் லட்சுமணப் பெருமாள் காவல் காத்து நின்றது போல் திண்ணன் நிற்கின்றான்.

**“மெய்ம்மையின் வேறு கொள்ளாச் செவ்விய அன்பு தாங்கி**
**திருக்கையில் சிலையும் தாங்கி”**

விடிந்ததும் இறைவனுக்குப் பசிக்குமே என்று மலையை விட்டு இறங்கி வேட்டையாடச் சென்றான். எப்போதும் போல் பூசை செய்ய சிவகோச்சாரியார் வருகின்றார். இறைவனின் திருமேனி முன்பு இறைச்சித் துண்டுகள் கிடக்க பதறுகிறார். சுத்தம் செய்து அழுத வண்ணமே பூசை செய்கிறார். வேடுவன் செய்திருப்பான் எனப் பதறி அழுது விழுந்தார் என்பது சேக்கிழார் வாக்கு. பூசை முடித்து சிவகோசரியார் கிளம்புகிறார்.

கருணை வளரும்....

---

# பக்த மான்மியம் ஐம்பத்தைந்தாவது பிம்பாசி பத்தர் கதி

திரு. வே. சத்திய நாராயணன்

சென்ற இதழின் தொடர்ச்சி:

**புலியின்பெருமை**

பிம்பாசி உரைத்த சொல்லைப் பின்பற்றி அந்தக் கொடிய புலியும் செத்த பிணங்களை உண்டுவாழ்ந்திருந்தது மூலமே அதன் பெருமை விளங்கும். அந்த பூக்கள் மலிந்த காட்டில் இந்நாள் வாழும் விலங்குகளும் அவ்வழிச் செல்லும் மக்களில் உயிருடன் செல்பவர்களுக்கு எத்தகையதொரு துன்பமும் தராமல் திகழும் எனில் இணையற்ற திருமாலின் பொற்பாதங்களில் அன்பு கொண்ட பிம்பாசி பத்தரின் பெருமை சொல்லவும் எளிதோ?

**சௌதரனின் பக்தி**

செறிந்த அக்காட்டின் வழி சிறிது நடந்த அளவில் ஓர்சிதைந்த வீட்டில் பத்தியில் சிறந்த சௌதரன் என்னும் அந்தணன் தன்மனைவியுடன் வசிப்பது கண்டார். அந்த வீட்டை நெருங்கும்போது அவ்வந்தணன், பிம்பாசியைக் கண்டவுடன் மிகவும் மகிழ்ச்சி கொண்டான். குற்றமில்லா மெய்யன்போடு நீரைக்கொணர்ந்து அவர்பாதங்களைத் தூய்மைப்படுத்தினார்.மிகுந்த அன்புடன் பிம்பாசியின் கரத்தைப் பற்றி அழைத்தவராய்த் தம்மனைக்குச் அழைத்துச் சென்று பக்தியுடன் உரியவழிபாடு இயற்றினார். பின்னர் தம்மனைவியிடம் சென்று இந்தப் பாகவதர்களுக்கு உணவுதர ஏற்ற பொருட்கள் உள்ளனவோ என்றுகேட்டார் சௌதரன்.

**மனைவியின் துணிவு**

அருந்ததி ஒத்தகற்பின் மிக்கவள் பொருட்கள் ஏதுமில்லை; எனது ஆடை ஒன்றே உள்ளது. இதனை விற்று விரைவில் வருக என்றாள். தான் அணிந்திருந்த ஒரே ஆடையன்றி வேறிலாத அந்த மாதரசி, என் ஆடையை விற்றுப்பத்தருக்கு உணவளியுங்கள்; அதுவரையான் இந்த அறையில் மறைந்திருக்கின்றேன் என்று துணிந்து சொன்னாள். அதுகேட்டுமகிழ்ச்சிஅடைந்தசௌதரன், அவளுடைய ஆடையைப்

பெற்றுக்கொண்டு அங்காடிக்குச் சென்று விற்று அந்தப்பணத்தில் அரிசி முதலியவற்றை வாங்கினார். இவர்களை உடலெடுத்துப் பிறப்பித்த விதிதான் உலகில் ஏனைய பிசாசு போன்ற ஆடவரையும் மகளிரையும் பிறக்கச் செய்கின்ற தன்மை என்னே?

சௌதரன் சமையல் பொருட்களைக் கொணர்ந்து பிம்பாசி மனைவி சீதையிடம் தந்து சமைக்கும்படி அளித்தார். அவளும் சமைத்தபின் இறைவனுக்கு பிம்பாசி நிவேதனம் செய்தார். பின்னர் பிம்பாசி, சௌதரனிடம் உம்மனைவி உள்ளேயே இருக்கின்றாள்; அழைத்தால் அனைவரும் ஒன்றாகச் சேர்ந்து உணவுண்ணலாம் என்று கூறினர். அதுகேட்ட சௌதரன் மறுத்து, நடந்து களைப்பாக உள்ளீர்; தாங்கள் முதலில் உணவு உண்ணுங்கள் பின்னர் நாங்கள் உண்கிறோம் என்று சொன்னார்.

**சீதை வியத்தல்**

சௌதரன் மறுப்பைக் கேட்ட சீதை அவர் மனைவி எங்கிருக்கின்றாள் என்று தேடி உள்ளே அவள் ஆடையின்றி ஓர்அறையில் பதுங்கியிருக்கும் கோலம் பார்த்து இவ்வாறு இருப்பது புதுமையாக உள்ளதே? என்ன காரணம் என்று வினவினாள். சௌதரன் மனைவி நடந்த செய்திகளை எடுத்துக் கூறினாள். சீதை அப்பெண்ணின் பாகவத பக்தியை எண்ணி வியந்தாள்.

சீதை தனது ஆடையில் பாதியை அவளுக்கு உள்ளம் மகிழ அளித்து வெளியே அழைத்து வந்தாள். யாவரும் உண்ணும் உணவை உண்டு அவளையும் உண்ணச் செய்தாள். தன்நாயகன் பிம்பாசியிடம் போய்நடந்த நிகழ்வுகளை எடுத்துக்கூறிச் சௌதரன் பத்தியும் அவர் மனைவியின் பண்பும் எடுத்துரைத்தாள். அவ்விருவரின் பக்தியைப் பாராட்டி இத்தகைய கொடிய வறுமை வந்த போதும் சற்றும் அதனைக் கருதாது வாழ்ந்தமையைப் போற்றினார்.

**சௌதரனுக்கு உதவ எண்ணுதல்**

ஒப்பிலாத அருளுடைய சாதுக்களுக்குச் சேவை புரிவதை அளவற்ற மகிழ்ச்சியுடன் செய்கின்ற புகழுடைய இவர்களின் பக்தி எத்தகைய சிறப்புடையது? இவர்களை எண்ணினால் நம்மிடம் பக்தி துளியேனும் உள்ளது என்று சொல்ல முடியுமோ? ஒத்ததன்மையுடைய இவ்விருவரில் யாரை உயர்வாகச் சொல்ல முடியும்?

வறுமையால் இன்னல் அடைந்தபோதும் நமக்குப் பேருதவி செய்கின்ற இத்தம்பதியர்க்கு நாம் செய்யும் ஒப்பான கைம்மாறு என்னஉள்ளது? இதற்கு இணையில்லை என்றாலும் இயன்றவரை நல்ல பக்தியுடைய இவர்களுக்கு ஏதேனும் அளிக்க விரும்புகின்றேன் என்று பிம்பாசி சொன்னார். அதுகேட்ட சீதையும் உங்கள் வார்த்தைக்கேற்ப நானும் அதற்கே மனம் இசைந்தேன் என்றாள்.

அரசனாக வாழ்ந்த பிம்பாசி, கூலிவேலைக்குச் சென்றாவது இவர்களுக்கு ஏதேனும் தர உறுதிபூண்டேன். கற்புடையாய்! நீயும் உன்னளவில் ஏதேனும் முயல்க என்றுகூறினார். சீதையும் கணவன் சொற்படி கடைத் தெருவிற்குச் சென்றாள். ஆனால் அவள் அரசியாய் இருந்தபடியால் என்ன செய்வது என்று அறியாமல் இங்கும் அங்கும் திரிந்தபடி இருந்தாள். அவளைக் கண்ட வணிகன் ஒருவன் அழைத்து வினவினான்

பெண்ணே! நீயார்? பார்ப்பதற்கு ராசகுமாரி போல இருக்கின்றாய். உன்மனத்தில் இருக்கின்ற ஆசைதான் என்ன? வெறுமனே இங்கும் அங்கும் உலவுவது எதற்காக? என்று பலமுறை கேட்டாலும் எதுவும் சொல்லாமல் இருந்தாள். மனம் வருந்திய ஏழைகளாய் இருப்பது கண்ட வணிகனும் மனம் இரங்கி அருள் கொண்டவனாய், அரிசியும் ஆடை வகைகளும் பரிவுடன் அளித்தான்.

பாகவத பத்தியில் சிறந்த சௌதரனுக்கு வணிகன் தந்த பொருட்களைச் சீதை அளித்தாள். பிம்பாசியும் தினந்தோறும் பிச்சையாகப் பெற்றவற்றை அவர்களிடம் அளித்து வந்தார். இவ்வாறு நடந்து வரும் நாளில் புலிக்கு மெய்ஞ்ஞானம் போதித்த பிம்பாசி நீராடச் செல்கையில் இந்தத் தம்பதியருக்கு உதவும் வகையில் பொன்னைத் தேடித்தர வேண்டும். ஆனால் அதை எவ்வாறு அளிப்பது? என்று சிந்திக்கலானார்

# எங்கும் வெற்றி எதிலும் வெற்றி

- திரு. பச்சையப்ப தேவராசன்

மனம் தொடர்ச்சி

ஆரம்ப நிலையிலேயே கண்டுபிடித்து சிகிச்சை தந்தால் நல்ல பலன்களை எதிர்பார்க்கலாம். காலம் தாழ்த்தினால், மனச்சிதைவு நோயினால் ஏற்படும் பேச்சு, செயல், சிந்தனைச்சீரழிவு மேலும் மோசமாகிவிடும். இந்நோயால் பாதிக்கப்பட்டவரிடம் ஆறுதல் கூறுவதாய் நினைத்துக் கொண்டு எவ்வளவு பேசினாலும் பயன் இருக்காது. முதலில் இதற்கு மருந்துகள் தர வேண்டும். மருந்துகளின் பலனை பொறுத்து மின் அதிர்வு சிகிச்சை தரப்பட வேண்டும். மின்சாரம் மூலம் அதிர்வலைகளை மூளையில் ஏற்படுத்தினால் இந்நோயில் நல்ல பலன் உண்டு என்பது விஞ்ஞான பூர்வமாய் நிரூபிக்கப்பட்ட உண்மை.

“மருந்துகள் மூன்று வருடங்களுக்குக் குறையாமல் தரவேண்டியிருக்கும். மருத்துவ ஆலோசனையின்றி, மருந்தினைக் கூட்டவோ, குறைக்கவோ, நிறுத்தவோ, மாற்றவோ கூடாது. மருந்துகளோடு நின்று விடாமல் மறுவாழ்வு பயிற்சி முறைகளையும் பயன்படுத்தினால், இவர்கள் மீண்டும் முன்போல், முன்னளவு இயங்க வாய்ப்புள்ளது”

“இது தீவிரமான நோய் என்பதைக் கருத்தில் கொண்டு, கோயில், தர்கா, ஆசிரமம், ஜோதிடம், மாந்திரீகம், தாயத்து, ரட்சை, சோளி, புற்று, மலை என்று அலையாமல் முறையான விஞ்ஞான பூர்வமான மருத்துவ முறையை ஆரம்பத்திலேயே கையாள்வது நல்லது”

இவர்களுக்குத் தாங்கள் என்ன சொல்கிறோம், என்ன செய்கிறோம் என்பதே தெரியாது. ஆகவே, மனச்சிதைவு நோயாளி, தானே மருத்துவரைத் தேடிச் செல்வார் என்று காத்திராமல் அவர்களுக்கு உதவ வேண்டும். மேற்கண்டவாறு, மனோதத்துவ நிபுணர், மனச்சிதைவு பற்றி நீண்டதோரு விளக்கம் அளித்தார்.

உலகம் தோன்றி அதில் உயிரினங்கள் தோன்றி, உயிரினங்களின் பரிணாம வளர்ச்சியும் பேரில், ஆதி முதல் மனிதன் தோன்றி மானுட வர்க்கம் பெருகி மனிதன் சிந்திக்கக் கற்றுக் கொண்ட காலம் முதலாக மனித அறிவு வளர்ந்து வந்து இருக்கிறது.

அறிவு என்பது அறிந்து வைத்துக் கொள்வது. அறிந்து கொள்வதாகிய இந்த அறிவு ஞானம் என்ற சொல்லாலும் அழைக்கப்படுகிறது. இந்த அறிவாகிய ஞானம் இரண்டு வகையாகச் சான்றோர்களால் பிரித்துப் பார்க்கப்படுகிறது. ஒன்று விஞ்ஞானம் மற்றது மெஞ்ஞானம்.

விஞ்ஞானம் என்ற சொல்லை விக்ன+ஞானம் = விஞ்ஞானம் என்று பிரித்துப் பார்க்கலாம். விக்ன என்றால் உடைந்த சிதைந்த என்று பொருள். விஞ்ஞானம் என்றால் உடைத்து, சிதைத்து பார்க்கின்ற அறிவு என்று பொருள். இந்த விஞ்ஞானம் விஞ்ஞானிகளால் மூன்று வகையாகப் பிரித்துப் பகுக்கப்படுகிறது. அவை 1. பௌதீக இயல் 2.. ரசாயன இயல் 3. உயிரியல் என்பனவாம்.

மெய் என்றால் உடம்பு, உண்மை என்று பொருள். மெய்ஞானம் என்றால் உடம்பைப் பற்றிய அறிவு என்பது நேர் பொருள். இதுவல்லாது மெய் என்ற சொல்லுக்கு உண்மை என்ற பொருள் கொண்டு உண்மையான அறிவு என்று பொருள் கொள்ளவும் கூடும்.

விஞ்ஞானம் எவ்வாறு மூன்று வகையாகப் பகுத்துப் பார்க்கப்படுகிறதோ, மெஞ்ஞானமும் மூன்று வகையாகப் பகுத்துப்பார்க்கப்படுகிறது. அவை 1.உடம்பு 2.மனம் 3.உயிர் என்பனவாம்.

மானுட உடம்பு எதனால் இயங்குகிறது, இந்த உடம்புக்கு நோய், நொடிகள் எவ்வாறு வருகின்றன, வந்தபின் மருந்து என்ற ஒன்றை எடுத்துக் கொள்வதற்கு பதிலாக, நோய் நொடிகளே வராமல் தடுத்துக் கொள்ள என்ன வழி? இந்த உடம்புக்கு இளமையும் முதுமையும் எதனால் வருகின்றன, இவற்றையெல்லாம் ஆய்ந்து அறிவது உடலைப் பற்றிய அறிவு.

மனம் என்பது என்ன? அது எங்கே இருக்கிறது அது ஏன்

ஒரு நொடி நேரமும் சும்மா இராமல் அலைபாய்ந்து கொண்டே இருக்கிறது? இப்படி அலைகின்ற மனதைக் கொஞ்ச நேரமாவது சிந்தனைகளே இல்லாமல் சும்மா வைத்திருக்க முடியாதா அப்படி சிந்தனைகளே இல்லாதபடி மனதை அசைவற்ற நிலைக்குக் கொண்டு செல்வதால் மனிதன் பெறுகின்ற பயன் என்ன? இப்படி மனதை ஆய்ந்து அறிகின்ற அறிவு மனதைப் பற்றிய அறிவு. உயிர் என்பது என்ன? இது மனித உடம்பில் எங்கே இருக்கிறது? மனிதனின் சகலமான இயக்கங்களுக்கும் இதுதான் ஜீவன் என்ற ஆதாரமா? உயிர் போனபின் உடல் அழிந்து போகிறது. அப்போது உயிர் என்ன ஆகிறது? உயிரின் நிலை மரணத்துக்கு பின் என்ன? மரணம் என்பது மானுடனின் சகலமான இயக்கங்களுக்கும் ஒரு இறுதி முடிவா? இந்த மரணத்தை மனிதன் வென்று விட முடியுமா? முடியுமானால் அதற்கு என்ன வழி? முடியாது என்றால் மரணத்துக்கு பின்னால் ஒரு வாழ்வு இருக்கிறதா? இவைகளைப் பற்றிய ஆய்ந்த அறிவு, உயிரைப் பற்றிய அறிவாக ஆயிற்று. இந்த அறிவே ஆன்மாவின் துவக்கமாயிற்று.

இப்படி இந்த மூவகைப் பகுப்புகளின் கீழே விவரிக்கப்படும் விஞ்ஞானத்துக்கும், மெய்ஞ்ஞானத்துக்கும் குறிப்பிடும்படியான ஒற்றுமைகள் ஏதுமில்லை. ஆனால் விஞ்ஞானமும், விஞ்ஞானமும் நிரம்ப வேறுபாடுகளைக் கொண்டுள்ளன.

விஞ்ஞானம், தனது சோதனைக் கூடத்துக்குச் சிக்குகின்ற பொருள்களை மட்டுமே ஆய்வு செய்ய முடியும். மெஞ்ஞானம், கண்ணால் பார்க்க முடியாத, கையால் தீண்ட முடியாத எந்த சூட்சுமத்தையும் ஆய்வு செய்ய வல்லது. விஞ்ஞானத்துக்குச் சோதனைக்கான புறக்கருவிகள் வேண்டும். மெஞ்ஞானத்துக்கு கருவிகள் எதுவும் வேண்டாம், அக்கருவியான மனமே அதன் கருவி.

விஞ்ஞானத்தின் கோட்பாடுகளோ, முடிவுகளோ, விஞ்ஞானிக்கு விஞ்ஞானி, நாட்டுக்கு நாடு, காலத்துக்கு காலம் மாறக்கூடியன மெஞ்ஞானத்தின் கோட்பாடுகளும், முடிவுகளும் அன்றும் இன்றும் இனி என்றும் நிலையானவை மாற்ற முடியாதவை.

மனம் விரியும்....

# சித்திரைத் திருநாள்

**அணிகுலவு சேய் உருவம் ஆகுவீர் !**
**அதிகசுவை நீடுமொழி பேசுவீர்**
**திணிகுலவு நூல்கள்பல பாடுவீர் !**
**திறலகுலவு சேய்பொருள் ஓதுவீர் !**
**தணிவில் புகழ் மேவுகுண சீலரோ**
**தயை கொள்கவு மார தெறி பேணுவீர் !**
**பிணிஉலக வாழ்வில் உழலாமலே**
**பெருமைபெறு வாழ்வருள வேணுமே.**

தமிழ் மாதங்களில் முதலாவதாக வருவது சித்திரை மாதம் ஆகும். தமிழர்களின் புத்தாண்டாகப் புதுப்பொலிவுடன் கொண்டாடப்பட்டு வருகிறது சித்திரை முதல் நாள்.

சித்திரை முதல் நாளே சித்திரைக்கனி என்று கொண்டாடப்பட்டு வருகிறது. வட இந்தியாவில் பைசாகி என்றும், கேரளாவில் விசு என்றும், ஆந்திராவில் யுகாதி என்றும் புத்தாண்டு கொண்டாடப்பட்டு வருகிறது.

உலகத்தின் பல பகுதிகளில் வாழ்ந்து வரும் தமிழர்களின் புத்தாண்டாகக் கொண்டாடப்பட்டு வருவது சித்திரைத் திருநாள் ஆகும்.

மற்றைய விழாவான பொங்கல், தீபாவளி போன்றவை அனைத்துத்தரப்பு மக்களாலும் சிறப்பு பெற்று கொண்டாடப்பட்டு வருகிறது. இருப்பினும் சித்திரைத் திருநாள் இன்றளவும் தமிழர்களால் பெரிதும் போற்றப்பட்டு கொண்டாடப்பட்டு வருகிறது என்பது பாராட்டக்கூடிய ஒன்றாகும்

வீட்டைத் தூய்மைப்படுத்தி, சாணமிட்டு மெழுகி, கோலமிட்டு வைப்பர். பூஜை அறையைச் சுத்தம் செய்து அன்றலர்ந்த மலர்களைக் கொண்டு அழகுபடுத்தி இறைவனை வழிபடுவர்.

சித்திரைத் திங்கள் முதல் நாள் இரவு பழவகைகள், ஆபரணங்கள், பணம் முதலியவற்றை வைத்து விடுவர்,பின்னர் காலைப்பொழுதில் அதன் முன் கண்விழிப்பர் இவ்வாறு செய்தால் ஆண்டு முழுவதும் செல்வம் சேரும் என்பது இன்றளவும் தமிழர்கள் கொண்டுள்ள நம்பிக்கையாகும் அதைக் கடைப்பிடித்தும் வருகின்றனர்.

ஆங்கிலப் புத்தாண்டு போன்று ஆரவாரங்கள் ஏதுமின்றி அமைதியான முறையில் மன ஒருமைப்பாடு கொண்டாடப்படுவது தமிழ்ப் புத்தாண்டாகும்.

அனைத்துக் கோவில்களிலும் சிறப்பு வழிபாடுகள் நடைபெறும். சிரவை கௌமார மடாலயம் திருக்கோயிலில் எழுந்தருளியுள்ள அருள்மிகு தண்டபாணிக் கடவுளுக்குச் சிறப்பு அலங்காரங்கள் வழிபாடுகளும் இன்றளவும் தொடர்ந்து நடைபெற்றுக் கொண்டு வருகிறது

ராசி மண்டலத்தில், முதல் ராசியான மேஷத்தில் சூரியன் பிரவேசிப்பது சித்திரை முதல் நாளாகும். அதனால்தான் நாம் சித்திரை முதல் நாளை தமிழ்ப்புத்தாண்டாகக் கொண்டாடுகிறோம். பிரம்மதேவர் உலகைப் படைத்தது சித்திரை முதல் நாளில் என்கின்றன சில ஞான நூல்கள். இத்தினத்தில் திறந்த வெளியில் சூரிய பகவானுக்குப் பூஜைகள் செய்வார்கள். தமிழகத்தில் மட்டுமல்ல இந்தியா முழுவதும் சூரிய வழிபாடுகள் கோலாகலமாக நடக்கும்

சித்திரை முதல் நாளை பிரம்மதேவன் படைத்ததாகப் புராணங்கள் கூறுகின்றன. சித்திரை மாத திருதியை திதியில் மகா விஷ்ணு மீன் (மச்சம்) அவதாரம் எடுத்ததாக இதிகாசங்கள் கூறுகின்றன.

சித்திர குப்தன் தோன்றியதும் சித்திரா பௌர்ணமியன்றுதான் அன்றைய நாளில் மக்கள் சித்திர குப்தனுக்காக விரதம் இருந்து தங்கள் பாவக் கணக்கைக் குறைத்து, மேற்கொண்டு பாவம் செய்யாமல் இருக்க வழித் துணையாக இருக்க வேண்டும் என்று வேண்டிக்கொள்வார்கள்.

சித்திரை சுக்கில பட்ச அஷ்டமியில் அம்பிகை அவதரித்ததாக தேவி பாகவதம் கூறுகிறது.

சித்திரையில் அம்மன் கோயில்களில் பால்குடங்கள் எடுப்பது, திருவிளக்கு பூஜை செய்வது போன்ற இறை வழிபாடுகள் நடக்கின்றன. ராம நவமியும், ஹனுமன் ஜெயந்தியும் சித்திரைத் திங்களன்று கொண்டாடப்படுகிறது.

திருமாலின் அவதாரம் பரசுராமன் இந்நாளில் தான் அவதரித்தாகக் கூறப்படுகிறது. சித்திரை மாதத்தில் வளர்பிறை காலத்தில் மூன்றாவது பிறை தோன்றும் நாளே அக்சய திதியை என்று அழைக்கப்படுகிறது.

சித்திரை மாதத்தில் வரும் பௌர்ணமியே ‘‘சித்ரா பௌர்ணமி’’

ஆகும்

ஆண்டில் பன்னிரண்டு மாதங்களில் முதல் மாதமாக விளங்கக் கூடியது சிறப்பானதாகவும் இருக்கக்கூடியது சித்திரை மாதமாகும். உலகத் தமிழர்கள் அனைவராலும் தமிழ் வருடப் பிறப்பாக ஏற்றுக் கொண்டாடப்பட்டு வருகிறது. சித்திரை முதல் நாள் தமிழர்கள் தங்களது புதிய எதிர்பார்ப்புகளையும் நம்பிக்கையும் மேற்கொள்ள மங்களகரமான திருநாளாக சித்திரைப் புதுவருடம் அமைகிறது.

சித்திரை மாதம் பிறந்ததுமே இளவேனில் காலம் எனும் வசந்த காலம் தொடங்குகிறது இக்காலகட்டத்தில் வேப்பம் பூக்களைச் சேகரித்து, புளி, வெல்லம் சேர்த்து பச்சடி செய்வது வழக்கம் இனிப்பும், புளிப்பும், கசப்பும் கலந்த இந்தப் பச்சடி, வாழ்வே இனிப்பும், கசப்பும், புளிப்பும் கலந்ததுதான் என்னும் தத்துவத்தை உணர்த்துகின்றது .

திருவிழாக்கள் நிறைந்து விளங்கும் மாதமாக சித்திரை மாதம் அமைந்துள்ளது. சித்திரை மாதம் மதுரை மீனாட்சி திருக்கல்யாணம், அழகர் ஆற்றில் இறங்குவது எனப் பல இறை நிகழ்வுகள் நடைபெறுகிறது.

இத்திருவிழாக்கள் மக்களிடையே சமய, சமூக, கலாசார உறவுகள், பண்பாட்டுகள் ஆகியவற்றை எடுத்துக் காட்டும் வகையில் அமைந்துள்ளது.

இவ்விழாக்கள் மக்கள் மனங்களில் நல்லெண்ணம், நல்லுறவு, அன்பு பரிமாற்றம், விருந்தோம்பல் போன்ற உயர்ந்த எண்ணங்களையும் உருவாக்குகிறது.

பாரம்பரியமாகக் கொண்டாடி வரும் சித்திரை மாத விழாக்களையும், தமிழ் வருடப் பிறப்பையும் வரும் தலைமுறை யினருக்கு கொண்டு சேர்ப்பது நமது கடமையாகும். இத்தகையை பல்வேறு சிறப்புகளைக் கொண்டுள்ள சித்திரைத் தாயை நாமும் உவகையோடு வரவேற்போம்.

புதுவருடத்தில் இறைவழிபாடு பெருகி மக்களிடையே மனிதநேயம் வளரட்டும் தற்போது மக்களை இன்னல் செய்து வரும் இந்த தீநுண்மியின் தாக்கம் குறைந்து மக்கள் நலம் பெற்று சிறப்புடன் வாழ வேல் கொண்டு மயிலேறி வரும் தமிழ்க்கடவுள் தண்டாயுதபாணிக் கடவுளின் திருவருளையும் ஆதிகுருமுதல்வர் திருப்பெருந்திரு. இராமானந்த சுவாமிகளின் குருவருளையும் சிந்தித்து வாழ்த்துகின்றோம்.

# வண்ணச்சரபர் வழங்கிய உரைநடை

தமிழ்ச்செம்மல் நெல்லை ந. சொங்கலிங்கம்

**தோரண வாயில்:**

ஆதிசங்கரர் வழியில் ஆறு சமயங்களையும் இணைக்க வேண்டி வாழ்நாளில் இறுதிவரையிலும் பாடுபட்டவர் வண்ணச்சரபம் தண்டபாணி சுவாமிகள் (கிபி 1839 -1898) ஆவார். இறையுணர்வுப் பாடல்கள் பாடித் தமிழுக்கு வளம் சேர்த்த தமிழ் மொழிபற்றைத் துறவாத துறவி தண்டபாணி சுவாமிகள். முருகதாசர் என்றும், திருப்புகழ்ச்சுவாமிகள் என்றும் போற்றப்பட்டவர் தண்டபாணி சுவாமிகள். தமிழ் இலக்கண, இலக்கியங்கள், சிற்றிலக்கியங்கள் பலஎன ஒரு இலட்சம் பாடல்கள் பாடிய இலக்கிய இமயம் இவர்.

சுவாமிகள் ஆங்கில அரசின் வன்கொடுமைகளைக் கண்முன்னர் கண்டு மனம் நொந்து வாடி ஆங்கிலியர் அந்தாதியை நூறு கட்டளைக் கலித்துறையாற் பாடி எதிர்த்தவர். பைந்தமிழ் பாரதிக்கு முன்னோடியாவார். இப்படி அழுத்தமான தமிழ்ப்பற்றும், தெய்வப்பற்றும் கொண்டு விளங்கிய வண்ணச்சரபம் தண்டபாணி சுவாமிகள் தமிழுணர்வுடன் உயிரிரக்கவுணர்வையும் மக்களிடம் ஊட்டி வளர்த்த புதுமைச்சிற்பி வண்ணச் சரபர். இவர் உரைநடை நூலொன்றும் படைத்துள்ளமை இவண் அறியத்தகும் ஒன்றாகும், அது சத்திய வாசகம் என்பதாகும் அந்நூலைப் பற்றி நாம் அறிந்து கொள்வோம்.

**வாசகம் வலியுறுத்தும் வண்ணத்தமிழ்;**

சத்தியவாசகம் சத்திய சூத்திர நூலோடு இணைந்து 1971 ஆம் ஆண்டு வெளியிடப்பெற்றுள்ளது. அருள்மிகு சாந்தலிங்க சுவாமிகளின் குருபூசை விழாவின் போது இவ்விரண்டு நூல்களும் வெளியிடப்பெற்றுள்ளன. 120 வாசகங்கள் உடையது சத்திய வாசக நூல் ஆகும். இவ்வாசக நூலின் காப்புச் செய்யுள் வருமாறு; இது சூத்திரம் என்றே வண்ணச் சரபரால் அழைக்கப்பெற்றுள்ளன.

**“சத்திய வாசகம் சாற்றும் பொருட்டே(டு) ஒரே**
**நித்தியப் பொருளை நினைந்துகை தொழுவாம்!**

என்பதே காப்புச்செய்யுளாகும் (நூற்பாவடிவில்) ஆயின் இவ்வுரைநடை நூலின் பயனை வெண்டளைக் கலிப்பாவில் கூறித் தம்முடைய யாப்பியற் புலமை வெளிப்படுத்தியுள்ளார்.அக்கலிப்பா வருமாறு;

**"சத்தியவாகநூல் சாற்றியதும் என் செயலன்று**

**உத்தியுடையார்கள் உள்ளபடி நன்குணர்ந்து**

**பத்தி நிலையிற் பதிந்திருந்து பாடுபட்டுச்**

**சக்திமுத்திப் பேற்றால் திருத்தி யடைவாரே (சத்திய சூத்.ப.45)**

சத்திய வாசக நூலின் முற்பகுதியில் சுவாமிகள் தெய்வநம்பிக்கையில் ஏற்பட்ட அழுத்தமான உணர்வுகளை வலியுறுத்திப் பதிவு செய்துள்ளார். அவற்றில் சிலபதிகள் வருமாறு;

"சர்வ லோகங்களிலும் உள்ள சர்வான்மாக்களுக்கும் பொதுத் தெய்வம் ஒன்றுண்டு" (சத்திய.1) என்றும், அரசனுக்குப் பல பத்தினிகள் இருப்பது போல, பல சமயங்களும் தெய்வமொன்றிற்கே உரியனவாகும்.

"சற்குரு" என்பதற்கு வண்ணச்சரபர் தரும் விளக்கம் வேறுபாடாக அமைந்துள்ளது. அது இதோ;

"எல்லா சமயங்களிலும் வாழ வேண்டுமெனவே, அவைகளில் உள்ள அறங்களை மாத்திரம் களைய வேண்டும் என முயல்கின்றவன் பொதுக்குழு எனப் பெயர் பெறுவான்" (சத்திய வாசகம் 18;ப.37)

அருட்பிரசாதம் பெற்ற ஒருவன் குற்றம் செய்யாதாலும், அவனையும் தெய்வம் தண்டித்தே பின்பு அருள் புரியும் (ப.37) என்று சுந்தரமூர்த்தி நாயனாரே இதற்குச் சான்றாவார் என்று வண்ணச்சரபர் வகுத்துறைப்பார். சுவாமிகளின் மன உணர்வுகளை சத்திய வாசக உரைநடை வாயிலாக நாம் அறிந்து கொள்ள முடிகின்றது.

---

# வெளிநாட்டு பயணம்

குமரகுருபர சுவாமிகள் சிரவையாதீனம்

உலகிலுள்ள ஒவ்வொருவ நாடும், ஒவ்வொரு நாட்டில் வாழும் மக்கள் பேசும் மொழியும், பழக்க வழக்கங்கள், பண்பாடுகள், கலாச்சாரங்கள், அரசியல் அமைப்பு சட்டங்கள், வழிபாட்டு முறைகள் வேறு வேறு விதமாகவே உள்ளது.

அவ்வகையில் கடந்த 15 ஆண்டுகளில் ஆசியாவில் உள்ள நாடுகளில் மலேசியாவிற்கு ஐந்திற்கு மேற்பட்ட முறையும், ஐரோப்பிய நாடுகளில் சுவிஸ்ர்லாந்திற்கு நான்கு முறையும், இங்கிலாந்து, இலங்கை, மொரிசியஸ் நாடுகளுக்கு இருமுறையும், ஜெர்மனி, பிரான்சு, ஆஸ்திரியா, ஸ்காட்லாந்து இத்தாலி, ரோம் உள்ளிட்ட வேறு சில நாடுகளுக்கு ஒருமுறையும் திருத்தொண்டர்களின் அழைப்பின் பேரிலும் ஒருசில நாடுகளுக்கு அந்த நாட்டின் கலாச்சாரங்களைப் பார்க்க வேண்டும் எனப் பயணங்களை மேற்கொண்டோம். பெரும் பாலான பயணங்களில் நாமும், நம்முடன் கௌமார சுசிலா பன்னாட்டு உறைவிடப் பள்ளி நிறுவனரும், தொழிலதிபருமாகிய திரு.தேவபிரகாசமும் ஆகிய இருவரும் சென்று வந்தோம்.

2019 ஆம் டிசம்பர் நிறைவு 2020 ஆம் ஆண்டு ஜனவரி முதல் வரை மலேசியாவில் நடைபெற்ற அருணகிரிநாதர் விழாவிற்குச் சென்று வந்தோம். அதன் பின் பெரும் தொற்றுக் காரணமாக கடந்த மூன்றாண்டுகளில் எந்த ஒரு வெளிநாட்டிற்கும் சென்று வரவில்லை. இவ்வாண்டு (2023) பிப்ரவரி கம்போடியா, வியட்நாம், சிங்கப்பூர் செல்வதாகத் திட்டமிட்டோம். ஆனால் சூழல் அமையவில்லை.

மார்ச் மாதம் ஒன்பதாம் தேதி முதல் 21ஆம் தேதி முடிய கம்போடியா, வியட்நாம் செல்லத் திட்டமிட்டோம். அந்த வகையில் எங்களது (நாமும், தேவபிரகாஷ்) பயணம் மார்ச் 9ஆம் தேதி மாலை 6 மணிக்கு கோவை விமான நிலையத்திலிருந்து எங்களது பயணம் இனிதே தொடங்கியது. எங்களை வழியனுப்ப இராமானந்தன், சுவாமிநாதன், ரமேஷ், பந்தல் செல்வமும், பிரகாஷ் அவர்களின் குடும்பத்தாரும் வந்திருந்தனர். மாலை 6 மணிக்கு கோவையிலிருந்து விமானம் மூலம் சென்னையிலிருந்து 10 ஆம் தேதி அதிகாலை 1.30 மணிக்கு (இந்திய நேரப்படி) தாய் விமானம் மூலம் தாய்லாந்து தலைநகருக்கு அன்று காலை (அந்நாட்டு நேரம் 1.30 நிமிடம்

கூடுதல்) 6 மணிக்குச் சென்று சேர்ந்தோம். அங்கு பாதுகாப்புச் சோதனைக்குப்பின் காலை 7:45 மணிக்கு தாய் விமானம் மூலம் கம்போடியாவிற்குப் புறப்பட்டோம்.

ஒரு மணி நேர பயணத்திற்கு பின் காலை 8:45 மணிக்கு சிமெண்ட் ரெப் விமான நிலையத்தைச் சென்று சேர்ந்தோம். அங்கிருந்து கம்போடியாவின் முக்கிய நகரமான அங்கோர், சியெம்ரீப் மாகாணம் சென்று தங்கினோம். இந்தப் பயணக் கட்டுரையை ஆறு பகுதிகளாகப் பார்க்கலாம். முதலாவது அந்நாட்டின் வரலாறு, இரண்டாவது அங்கோர் நகரிலுள்ள கோயில்கள், மூன்றாவது உலகிலுள்ள மிகப்பெரிய கோயில் அங்கோர் வாட், நான்காவது ஆயிரம் சிவலிங்கம் (ஆற்றில் உள்ளது) அமைந்த ஆற்றைப் பற்றிய வரலாறு, ஐந்தாவது மிகப்பெரிய ஏரியைப் பற்றி வரலாறு, ஆறாவது சென்ற நூற்றாண்டில் அந்நாட்டில் ஏற்பட்ட பாதிப்புகள் என பிரிக்கலாம்.

முதலாவதாக எங்களது பயணத்தை (அன்றே இரவு முழுவதும் விமானப்) பற்றிக் கூறி வேண்டும். இரவு உணவு இல்லை. இருப்பினும் முதல் நாளை பயனுள்ளதாக அமைத்துக் கொள்ள வேண்டும் என்று மதிய உணவிற்குப் பின் மகிழுந்து மூலம் எங்களது பயணத்தைத் தொடங்கினோம்.

தா புரோம் (ta prohm) (பிரசாத் தாப்ரோம்) என்பது கம்போடியாவில் சியேம்ரீப் மாகாணத்தின் அங்கோர் நகரிலுள்ள ஒரு கோயில் கெமர் மொழி அந்நாட்டு மக்கள் பேசும் மொழி. வழிகாட்டிகள் மட்டும் ஆங்கிலத்தில் பேசுகின்றனர். அமைதியான மக்கள் சுற்றுலாவை மட்டும் நம்பியுள்ள ஒரு நாடு, உண்மை, நேர்மை என்பதை அந்நாட்டு மக்களிடம் காண முடிந்தது. தாபுரோம் என்பது கெமர் மொழியில் ராஜ விகாரை என வழங்கப்பட்டு வந்த இக்கோயில் பாயோன் வடிவமைப்பில் 12ஆம் நூற்றாண்டின் இறுதியில் 13ஆம் நூற்றாண்டில் ஆரம்பத்தில் கட்டப்பட்டது.

இது கெமர் பேரரசர் ஏழாம் ஜெயவர்மன் (7) காலத்தில் மகாயான பௌத்த மடமாகவும், பல்கலைக்கழகமாகவும் கட்டப்பெற்றது. இக்கோயிலை இந்தியத் தொல்லியல் ஆய்வகம் ஆப்சரா என அழைக்கப்படும் அங்கோர் சீயெம்ரீப் நிறுவனம் ஒன்றின் கூட்டுடன் நிர்வகித்து வருகின்றது. இக்கோயில் கட்டப்பெற்ற காலத்தில் நிலையும், இன்றைய பரிதாப நிலையும். அடுத்த இதழில் இக்கோயிலைப் பற்றிய வரலாற்றை விரிவாகக் காணலாம்.

பயணம் தொடரும்

# குருபர தத்துவ நூல்
# பாறைக் கிணற்றுச் சருக்கம்

கா.உமாபதி உதவி நூலகர்

### பாடல் 6

**முதற்கோணல் முட்டவும் கோணல்**

**அம்முளை யிற் கந்தபுட்பம் சாத்திப் பூசித்(து) தான்**
**அனைவரையும் தொடச்செய்தென்கை யதனிற் றந்**
**செம்முருகன் பெயருடையான் ஒருவற் கூட்டிச்**
**செப்புமிடத்(து) ஊன்றலுற்றேம் , செல்லவில்லை**
**வெம்முனை மண் வெட்டியினால் வெட்டச் சொன்னேன்**
**வேளாளன் ஒருவன் வந்து வெட்டொன் றிட்டுக்**
**கைம்முழுமைப் பலத்தால்மற்றொன்றும் போட்டான்**
**கல்லின் மேல் விழுந்ததந்தோ கதை அன்(று) அம்மா.**

அந்த முளையில் மணமிக்க மலர்களைச் சாத்தி பூசனை செய்து, கூடியுள்ள அனைவரையும் தொட்டு வணங்கச் செய்து என்கையில் தந்தான். முருகன் என்னும் பெயருடைய ஒருவனை அழைத்து அம்முளையை அடிக்கவைத்தோம். முளை கீழே இறங்கவில்லை. அதனால் கூர்மையான மண்வெட்டியால் வெட்டச் சொன்னேன். வேளாளன் ஒருவன் வந்து மண்வெட்டியால் வெட்டினான். அவன் தன்பலம் கொண்ட மட்டும் வெட்டினான். அது கல்லின் மேல் விழுந்தது போல இருந்தது. ஐயோ அம்மா இது வெறும் கதையல்ல!

### பாடல் 7

**கண்டவர்இந் நாளினிற்பற் பலர்வாழ் கின்றார்**
**கையால் மண் குவித்தமைத்(து) அக் காரியத்தார்க்**
**கொண்டதனைச் சோதிக்கச் சொல்லி , வன்கற்**
**குன்றின்உச்சி ஒன்(று) ஆங்கு குலவப்பார்த்தேன்,**
**மண்டலத்தோர் அனைவர்களும் மறுத்தார், என்றன்**
**மனமும்ஒப்புக் கொண்ட(து) அந்த வயின்தோண்டென்ன**
**விண்டவன்கை யெழுத்தின் அடை யாளம் ஒன்றும்**
**விளங்கவில்லை, கிழித்தெறிந்து விட்டேன் அன்றே.**

இதைக்கண்டவர்கள் இன்னும் பலர் உள்ளனர். கிணறு வெட்டும் சாத்திரம் அறிந்தவர்களை அழைத்துச் சோதிக்கச் சொன்னோம்.அவர்களும் கைகளால் மண்ணைக் குவித்துப் பார்த்துச் சோதித்துவிட்டு, கடுமையான கல்லை உடைய குன்றின் உச்சி அங்கே உள்ளது என்று உணர்ந்தேன். மற்றவர்கள் இதை மறுத்தார்கள். நானும் இந்த இடத்தில் தோண்டு என சொன்னவன் எழுதிக் கொடுத்ததை எடுத்துப்பார்த்தேன். அவன் கையெழுத்து ஒன்றும் புரியாததால் அப்போதே அதைக் கிழித்து எறிந்து விட்டேன்.

**பாடல் 8**

**தேற்றமும் ஐயமும் சேர்ந்தசிந்தனை**

**சண்முகன்என் மனவெளியிற் சிலகாற் றோன்றிச்**
**சலிப்படையேல், அக்கிணற்றில் தண்ணீர் உண்டாய்**
**விண் முகமும் மண்முகமும் மகிழத் தக்க**
**விதமனந்தம் நடக்குமென்றான் , வேட்கை யுற்றேன்**
**கண்முகம்போன் றுள்ளசில உறவர் , முன்னைக்**
**கனவினம்போன்(று) இதுவுமொரு கபட மென்றார்**
**உண்முகத்(து) அன் னவர்ச்சினந்து சீட்டுப் போட்டேன்**
**ஒருதரம்போற் பல தரம் வந்(து) உதித்தது அன்றே!**

ஆறுமுகக்கடவுளும் என் மனத்தில் அவ்வப்போது தோன்றி சலிப்படையாதே, அக்கிணற்றில் தண்ணீர் ஊற்றெடுத்தால் விண்ணுலகத்தேவர்களும், மண்ணுலக மக்களும் பெரிதும் மகிழும்படி எண்ணற்ற நன்மைகள் நடக்கும் என்றார்.அதனால் மிக்க விருப்பம் கொண்டேன். என் கண்ணாக விளங்கும் என் உறவினர்கள் முன்பு நடந்தது போலவே இதுவும் ஒரு கபடமே என்றனர். நானும் உளமனதில் அவர்கள் மீது கோபம் கொண்டு,இச்செயலைத் தொடரலாமா? வேண்டாமா? எனச்சீட்டு எழுதிப் போட்டேன். ஒரு முறையல்ல பலமுறை எழுதிப்போட்டேன். மீண்டும் செய் என்றே வந்தது.

**பாடல் 9**

**அன்னவர்க்கும் என்னதுபித் தினிற்சற் றுண்டால்**
**ஆமென்றார், கற்றொழிற் கண் ணாளர்க்கூவி**
**என்னவிதக் கல், இதன்பண்(பு) யாது சொல்மின் { துச்**
**எனக்கேட்டேன், கொட்டலத்தால் இடித்துப் பார்த்**

**சின்னதல்ல, வலிமையினும் மிக்க தேயாம் ,**
**சிறிதேனும் இதன் றலையிற் சிவப்பு வெள்ளை**
**வன்னமுறு தாரையுற்றால் செயலாம், காணேம்**
**வம்பலநடம் சொல்வதென்றார், வருந் தினேனே.**

என் பைத்தியகாரத் தனத்தில் சிறிதளவு அவர்களுக்கும் இருந்ததால் ஒத்துக் கொண்டார்கள். நானும் கல் தச்சர்களை அழைத்து வந்து எந்த விதக்கல் இங்குள்ளது, அதன்தன்மை யாது? சொல்லுங்கள் என்று கேட்டேன்.அவர்களும் கொந்தாலத்தால் இடித்துப் பார்த்து, இந்தக் கல் சிறிது அல்ல. மிக்க வலிமை உடைய கல் என்றனர். இக்கல்லில் சிவப்பு வெள்ளைத் தாரைகள் இருந்தால் செய்யலாம். ஆனால் அப்படி இல்லையே என்றனர். இது புதுமை அல்ல என்றனர். அதனால் நான் மிகவும் வருந்தினேன்.

- தொடரும்

---

# அவிநாசித் திருக்கோயில் திருப்பணி தொடக்க விழா

கொங்குநாட்டு சைவத்தலங்களுள் முதன்மையானது அவிநாசி. என்றும் அழியாதது என்பதனால் அதற்கு அவிநாசி என்றுபெயர். தேவர்கள் தங்களைக் காப்பாற்றிக் கொள்வதற்காக இத்தலத்தில் ஒளிந்திருந்தார்கள். அதனால் அதற்கு திருப்புக்கொளியூர் என்றும் பெயர் உண்டு.

அருணகிரிநாதர் முதலான அருளாளர்கள்பாடியதலம். பெரிய புராணத்தினுடைய இறுதி அற்புதம் இங்கேதான் நடந்தது. மூவர் முதலிகளில் இளையவரான சுந்தரமூர்த்திசுவாமிகள் தம்முடைய இறுதி அற்புதமான முதலைவாய்பிள்ளையை மீட்டு அழைத்தது இங்கேதான். ஐந்தாண்டு வளர்ச்சியோடு முதலை தான் உண்ட குழந்தையை மீண்டும் சுந்தரருடைய தமிழுக்காகத் தந்தது. கரைக்கால் முதலையைபிள்ளைத்தரச் சொல்லு காலனையே என்ற ஒற்றைவரிக்காக நிகழ்ந்த அற்புதம் அது. அம்பிகை இங்கே வலப்பக்கத்தில் எழுந்தருளியுள்ளார். கருணாம்பிகை என்பது அவளுடையபெயர். அருளே உருவமானவள். அதனால் கருணாம்பிகையானாள். சுவாமி சுயம்பு மூர்த்தியாக இங்கு இலங்குகிறார்.

இத்தகைய சிறப்புடைய இத்திருக்கோயிலின் தேர் கொங்குநாட்டில் மிகச்சிறப்புடைய தேர் ஆகும். சுவாமிக்கென்றும் அம்பாளுக்கென்றும் இரண்டு தேர்கள் உண்டு. தமிழகத்தினுடைய மூன்றாவது மிகப்பெரியதேர் இதுவாகும். முன்னர் இந்தத் தேர் இரவில் வலம்வரும். பத்துநாட்கள் முதல் இருபதுநாட்கள் வரைமக்கள் இத்திருக்கோயிலின் தேரை இழுப்பார்கள். அத்தகைய தேர் 1990 ஆம் ஆண்டு தீப்பற்றி எரிந்துபோனது. அதன் பின்னர் புதிய தேர் சிரவை ஆதீனம் மூன்றாவது மகாசந்நிதானம் ஆகிய தவத்திரு சுந்தரசுவாமிகள் தலைமையில் மீண்டும் உருவாக்கப்பட்டது.

சிரவை கௌமார மடாலயத்திற்கும் இத்திருக்கோயிலுக்கும் நெருங்கிய தொடர்பு உண்டு. சிரவை ஆதீனத்தின் இரண்டாம் மகாசந்நிதானங்கள் இத்திருக்கோயிலை பற்றி பலபனுவல்கள் இயற்றி இருக்கிறார்கள். மூன்றாவது மகாசந்நிதானத்தினுடைய

வாழ்க்கையில் மிகவும் தொடர்புடைய ஒரு திருக்கோயில் இது. இந்தத்திருக்கோயிலுடைய முந்தைய திருக்குட நன்னீராட்டு 2009ஆம் ஆண்டு நடைபெற்றது. அதன் பின்னர் பன்னிரண்டு ஆண்டுகளாகியும் விரிவான திருப்பணி நடைபெறவில்லை. ஆகவே திருப்பணி விரைவாக நடைபெறவேண்டும் என்பதற்காக அவிநாசிவாழ் பெருமக்களும் குறிப்பாக அவிநாசி திரு.கந்தசாமிகவுண்டர் அவர்களுடைய குமாரர் திரு.பொன்னுசாமிகவுண்டர் அவர்களுடைய தலைமையில் திருக்கோயில் நிர்வாகிகளும் அர்ச்சகர்களும் நம்முடைய நான்காவது குருமகாசந்நிதானம் அவர்களை நேரில் பார்த்துத் திருப்பணியை தாங்கள் தலைமையேற்று நடத்தி நிறைவு செய்து தரவேண்டும் என்றுவேண்டிக் கொண்டார்கள். அதன்படி நம்முடைய மகாசந்நிதானங்களும் ஒப்புதல் அளித்தார்கள்.

இத்திருக்கோயிலின் கருணாம்பிகை அம்மன் இராஜகோபுரம் அருட்செல்வர் மகாலிங்கம் ஐயா அவர்களால் புதியதாக நிர்மாணிக்கப்பட்டது. இத்துடன் பல்வேறுவிதமான திருப்பணிகளை செய்து மிகவிரைவில் திருக்குட நன்னீராட்டு விழா நடத்துவது என்று தவத்திருசுவாமிகள் அவர்களாலும் திருக்கோயில் நிர்வாகிகளாலும் உபயதாரர்களாலும் முடிவுசெய்யப்பட்டது.

திருக்கோயில் நன்னீராட்டு விழாவிற்கான கால்கோள்விழா கடந்த 24.03.2023 காலையில் நடைபெற்றது. இந்த நிகழ்விற்கு நம்முடைய சிரவைஆதீனம் மகாசந்நிதானங்கள் அவர்கள் தலைமை தாங்கினார்கள், பேரூர் ஆதீனம் மகாசந்நிதானங்கள் அவர்களும், செஞ்சேரிமலை ஆதீனம் அவர்களும், அவிநாசிவாகீசர் மடாலயத்தின் தலைவர் தவத்திரு காமாட்சிதாச ஏகாம்பர சுவாமிகள் அவர்களும் கலந்துகொண்டார்கள். அத்துடன் திருக்கோயிலின் தக்கார் மற்றும் உதவி ஆணையர் திரு.செந்தில்குமார் அவர்களும் திருக்கோயிலின் செயல் அலுவலர் திரு.பெரியமருதுபாண்டியன் அவர்களும் திருக்கோயில் உபயதாரர்கள் கட்டளைதாரர்கள் ஆகியோரும் கலந்துகொண்டனர்.

இந்தநிகழ்வில் மேனாள் உதவி ஆணையரும் திருக்கோயிலின் அப்போதைய செயல் அலுவலருமான திரு.அழ.முத்துப்பழனியப்பன் அவர்களும் முந்தைய திருப்பணியின் நேர்ந்த அனுபவங்களை எடுத்துக்கூறினார்.

நம்முடையசுவாமிகள் தம்முடைய உரையில் அவிநாசி திருக்கோயிலுடைய பெருமைகளையும் அந்தத்திருக்கோயிலுக்கும்

சிரவை ஆதீனத்திற்கும் உள்ளதொடர்பை எடுத்துக்கூறி திருக்கோயிலின் திருப்பணிகளை மிகவிரைவில் நிறைவு பெறுவதற்கான நிகழ்ச்சிகளில் அனைவரும் கலந்துகொள்ள வேண்டும் என்றும் அதற்கான பணிகளைத் தாம் முன்னின்று நடத்துவதாகவும் பேசினார்கள்.

பேரூர் ஆதீனம் அவர்கள் அவிநாசியில் நடந்தசுந்தரருடைய அற்புதத்தைப் பற்றி விரிவாக எடுத்துக்கூறி திருப்பணிகள் விரைவில் நடைபெறுவதற்கு வாழ்த்தினார்கள்.

செஞ்சேரிமலை ஆதீனம் தவத்திருசுவாமிகள் அவர்கள் இத்திருக்கோயிலின் முந்தைய திருப்பணிகளில் தாம் கலந்துகொண்டதைப் பற்றிக் கூறி திருக்கோயிலின் திருக்குட நன்னீராட்டு விழாவின்போது அனைத்து சுவாமிகளுக்கான அஷ்டபந்தன மருந்தைதம்முடைய ஆதீனத்தின் சார்பில் தாமேமருந்துகளை சாத்துவதாக உறுதி அளித்தார்கள்.

ஆவிநாசி வாகீசர் மடாலய தவத்திரு காமாட்சிதாச ஏகாம்பரசுவாமிகள் அவர்கள் இத்திருக்கோயிலுக்கும் தங்களுடைய மடத்திற்கும் உள்ள நீண்ட தொடர்பை எடுத்துக்கூறி திருக்கோயிலுடன் இணைந்த அனைத்து உபயதாரர்களும் திருக்கோயில் நிர்வாகத்துடன் ஒத்துழைத்து இத்திருப்பணி மிகவிரைவில் நிறைவு பெறுவதற்கு அனைவரும் பாடுபடவேண்டும் என்று வேண்டிக்கொண்டார்கள்.

இறுதியாக திருக்கோயிலின் தக்கார் மற்றும் உதவிஆணையர் திரு.செந்தில்குமார் அவர்கள் நன்றி கூற விழாநிறைவுபெற்றது.

---

## அறிவுக்கொடை

மேனாள் தமிழகக் கல்லூரிக் கல்வி இயக்குனர் மதிப்புமிகு பேராசான் முனைவர் கி. குமாரசாமி அவர்களின் பவள விழா 02/04/2023 அன்று நடைபெற்றது. அதனையொட்டி 150 க்கும் மேற்பட்ட நூல்களை சிரவையாதீனம் கௌமார மடாலயம் தவத்திரு கஜபூசைச் சுந்தர சுவாமிகள் தமிழ் ஆய்வு மையத்திற்கு அறிவுக்கொடையாக வழங்கினார்

# சிரவையாதீனத் தலைவர் பங்கு பெறும் நிகழ்ச்சிகள்

| | | |
|---|---|---|
| 21.04.2023 | வெள்ளி | காங்கேயம், ஓலப்பாளையம், மாங்காடு மதுர காளியம்மன் திருக்கோயில் வேள்வி |
| 22.04.2023 | சனி | ஆப்பக்கூடல் கவுண்டன்புதூர் சக்தி மாரியம்மன் திருக்கோயில் வேள்வி |
| 23.04.2023 | ஞாயிறு | புளியம்பட்டி நவகாளியம்மன் திருக்கோயில் குடமுழுக்கு. |
| 28.04.2023 | வெள்ளி | பவானி திருக்கோயில் விழா |
| 29.04.2023 | சனி | அவிநாசி பஞ்சமூர்த்தி புறப்பாடு |
| 30.04.2023 | ஞாயிறு | பவானி கோயில் விழா. |
| 02.05.2023 | செவ்வாய் | அவிநாசி திருக்கோயில் திருத்தேர்விழா. |
| 04.05.2023 | வியாழன் | வெள்ளலூர் சௌடேஸ்வரிஅம்மன் திருக்கோயில் நீராட்டு |
| 05.05.2023 | வெள்ளி | சிட்கோ சித்ரா பௌர்ணமி விழா<br>*கருவலூர் தேர்த் திருவிழா |

# சித்திரை மாத திருவிழாக்கள்

| தமிழ் | ஆங்கிலம் | கிழமை | வழிபாடு |
|---|---|---|---|
| சித்திரை 01 | ஏப்ரல் 14 | வெள்ளி | தமிழ் புத்தாண்டு, கதிரவன் வழிபாடு |
| சித்திரை 03 | ஏப்ரல் 17 | திங்கள் | **பிரதோசம்** |
| சித்திரை 06 | ஏப்ரல் 19 | புதன் | அமாவாசை |
| சித்திரை 09 | ஏப்ரல் 22 | சனி | **கிருத்திகை** |
| சித்திரை 10 | ஏப்ரல் 23 | ஞாயிறு | சதுர்த்தி |
| சித்திரை 12 | ஏப்ரல் 25 | செவ்வாய் | சஷ்டி சண்முகார்ச்சனை வழிபாடு |
| சித்திரை 17 | ஏப்ரல் 30 | ஞாயிறு | மகம் |
| சித்திரை 18 | மே 01 | திங்கள் | ஏகாதசி |
| சித்திரை 20 | மே 03 | புதன் | பிரதோஷம் |
| சித்திரை 21 | மே 04 | வியாழன் | கத்திரி ஆரம்பம் |
| சித்திரை 22 | மே 05 | வெள்ளி | சித்ரா பௌர்ணமி |
| சித்திரை 23 | மே 06 | சனி | விசாகம் |
| சித்திரை 25 | மே 08 | திங்கள் | சங்கடகர சதுர்த்தி |
| சித்திரை 27 | மே 10 | புதன் | பூராடம். தவத்திரு. கந்தசாமிசுவாமிகள் 131 ஆம் ஆண்டு **அவதாரவிழா.** |
| சித்திரை 29 | மே 12 | வெள்ளி | திருவோணம் நடராசர் அபிடேகம்.<br>தேய்பிறை அஷ்டமி பைரவர் வழிபாடு |
| சித்திரை 30 | மே 13 | சனி | சனி பகவான் நவகோள் வேள்வி வழிபாடு |
| சித்திரை 31 | மே 14 | ஞாயிறு | சதயம் அப்பர் சுவாமிகள் திருநாள் |





கிழக்கு ஆசியா, கம்போடியா
நாட்டிலுள்ள அங்கோர்வாட்
திருக்கோயிலில் சிரவை ஆதீனம்
குருமகா சந்நிதானங்கள்








இந்து சமய அறநிலையத்துறை அமைச்சருடன் குருமகா சந்நிதானங்கள்



அவிநாசித் திருக்கோயில் திருப்பணி தொடங்கியது, விழாவில்
ஆதீனங்கள் அதிகாரிகள் பொதுமக்கள் பங்கேற்பு



Kaumara Amudham (Tamil Monthly) Periodical - April 2023
Regd. with the Registrar of Newspapers for India under No. Tam 14083/2001.





அனுப்புதல் : கௌமார அமுதம், கௌமார மடாலயம், சின்னவேடம்பட்டி, கோவை - 49.